[Sri K. Anbazhagan] [24th January 1961

நிலை இடம் தரவில்லை என்று சொல்கிறார்கள். ஏன் தமிழ் நாடு என்று பெயர் வைக்க ஆட்சியாளருக்கு மனம் வரவில்லை? நம் நாட்டிற்கு எல்லை வகுப்பது தமிழ் மொழிதானே. நிதியமைச்சர் அவர்கள் தமிழ் மொழியை மதிக்கிறவர்கள். அப்படி மொழியை மிகவும் மதிப்பவர்கள் ஏன் தமிழ்நாட்டை மதித்து அப்பெயர் வைக்கக் கூடாது? மாற்றுக்கட்சியினர் சொல்கிறார்களே என்பதற்காக அப்படிச் செய்யவில்லை என்றால், அந்த ஆளுங்கட்சி வாழாது, அந்தக் கட்சியின் கருத்துக்களை மக்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். தமிழ்நாடு என்று பெயர் வைக்க வேண்டுமென்று கேட்டு உண்ணாமலிருந்து உத்தமர் சங்கரலிங்க நாடார் உயிர் நீத்தார். தமிழ் நாடு என்று பெயர் வைக்க வேண்டுமென்று காலஞ் சென்ற திரு. வி. க. கேட்டுக் கொண்டார். தமிழ் நாடு என்று பெயரைச் சொல்லிச் சொல்லி வ. உ. சி. வழி காட்டினார். செந்தமிழ் நாடு என்று களிப்புடன் பாரதி பாடினார். காங்கிரஸி லிருந்து வெளியே வந்திருக்கும் திரு மா.பொ.சி.-யும் அதையே முன் வைத்துப் போராடுகிறார். அரசியல் கருத்துக்களில் மாறுபட் டிருக்கும் பிரஜா சோஷியலிஸ்ட் கட்சியும், திராவிட முன்னேற்றக் கழகமும், கம்யூனிஸ்ட் கட்சியும், சுதந்திரா கட்சியும் இங்குள்ள அத்தனை கட்சிகளும் சொல்கின்றன, 'தமிழ் நாடு' என்று பெயர் வைக்க வேண்டுமென்று. இந்த நாட்டிற்குத் தமிழ் நாடு என்று பெயர் வைக்க மாட்டோம் என்று சொன்னால் தமிழ்நாட்டிற்கு காங்கிரஸ் கட்சி ஏற்றதல்ல என்றுதான் (மணி அடிக்கப்பட்டது) மக்கள் எண்ணுவார்கள். கவர்னர் உரையில் இம்மாநிலத்திற்குத் தமிழ் நாடு என்னும் பெயரை இந்த அரசாங்கம் ஏற்றுவைக்கும் என்று சொல்லியிருந்தால் அந்த ஒன்றுக்காவது நாங்கள் மனமாற நன்றி செலுத்தியிருப்போம், ஆனால் அது கூடக் கூறப்படவில்லை அதைக்கூடத் தெரிவிக்க கவர்னருக்கு மனம் இல்லாததால் எனது ஆழ்ந்த வருத்தத்தை தமிழ்த்தாயின் சார்பில் தெரிவித்துக் கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. to-morrow.

1-25 p.m. The House then adjourned.

V—PAPER PLACED ON THE TABLE OF THE HOUSE.

A.—STATUTORY RULES AND ORDERS

146. *Notification issued with G.O. No. 3759, Revenue, dated 19th September* 1960, *under the Madras General Sales Tax Act,* 1959 *(Laid on the Table of the House under Section* 53 (5) *of the Madras General Sales Tax Act,* 1959 *(Madras Act* I *of* 1959).

B.—REPORTS' NOTIFICATIONS AND OTHER PAPERS

37. *Decisions of the Zonal Ministerial Committee as approved by the Southern Zonal Council regarding safeguards to be afforded to the Linguistic minorities issued in G.O. No.* 1281, *Public (Partition), dated* 11*th August* 1960.